இருந்தாலும் சரி, அல்லது கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் சரி, "லா அண்டு ஆர்டர்" இந்த அரசாங்கத்தின் பொறுப்பு.

**Sri K. S. MANI :** மத்திய அரசாங்கம் வேறு, மாநில அரசாங்கம் வேறு என்று சொல்வதிலிருந்து மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கத்திற்கும் சம்பந்தமே இல்லை என்று கூறுகிறார்களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** கனம் அங்கத்தினருக்குத் தமிழ் தெரியுமென்று நினைக்கிறேன். இந்த அரசாங்கம் வேறு, மத்திய அரசாங்கம் வேறு. அதற்காகத்தான், தனித் தனி "ஸாவரெண்டி" என்று ஆங்கில வார்த்தையை உபயோகிக்கிறேன். எனவே சம்பந்தமில்லை என்று சொல்லுவது முறை அல்ல.

**Sri P. K. MOOKKIAH THEVAR :** ஏ, பி. ஸி நகரங்கள் எந்த அடிப்படையில் பிரிக்கப்படுகின்றன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** ஜனத்தொகை அடிப்படையில் பிரிக்கப்படுகின்றன.

**The Hon. Sri K. KAMARAJ :** இந்தப் பிரச்னையில் பரிகாரம் தேடுவதற்கு வழியிருக்கிறது. அந்த வழியை அரசாங்கத்தார் யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். இதிலே ஒரு சரியான முடிவு எடுத்ததற்குப் பின்னர் இதைப் பற்றி அறிவிக்கப்படுமென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

*Sigur Road*

***28 Q.—Sri J. MATHA GOWDER :** கனம் பொதுப்பணித் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சிகூர் பாதையை பெரும்வழி துறையினர் மேற்கொள்ளும் உத்தேசமுண்டா ?

(இ) ஆம் என்றால், எப்போது முதல் ?

**The Hon. Sri V. RAMAIAH :** (அ) & (இ) Ootacamund-Mysore road *via* Sigur from mile 6/2 to 18/0 has been taken over by the Highways and Rural Works Department from the control of Ootacamund Panchayat Union with effect from 1st April 1962.

*Kathabetty-Iduhatty Road*

***30 Q.—Sri J. MATHA GOWDER :** கனம் பொதுப்பணித் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நீலகிரி ஜில்லாவில் கட்டபெட்டு-இடுஹட்டி பாதையை பெரும்வழி துறையினர் மேற்கொள்ளும் உத்தேசமுண்டா ?